පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

07.08.2019 / 0830 – 1030

කර්ණාටක සංගීතය I
கர்நாடக சங்கீதம் I
Carnatic Music I

55 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**கவனிக்க:**
- ✳ **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
- ✳ விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
- ✳ விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
- ✳ **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** “ஆலந்தானுகந்து ...” எனும் தேவாரம் அமைந்துள்ள பண்
(1) நட்டபாடை (2) கொல்லி (3) தக்கேசி
(4) செந்துருத்தி (5) பழம்பஞ்சுரம்

**2.** இராக ஆலாபனைக்கு அடுத்துப் பாடப்படும் மனோதர்ம இசை
(1) தானம் (2) பல்லவி (3) கற்பனாஸ்வரம்
(4) அனுபல்லவி (5) நிரவல்

**3.** கடபயாதி சக்கரத்தில் உள்ள பிரிவுகளின் எண்ணிக்கை
(1) 3 (2) 4 (3) 5 (4) 6 (5) 7

**4.** மோகனம், ஹம்ஸத்வனி ஆகிய இராகங்களுக்குப் பொதுவான வர்ஜ ஸ்வரம்
(1) நிஷாதம் (2) தைவதம் (3) காந்தாரம்
(4) ரிஷபம் (5) மத்யமம்

**5.** ‘நாதக்குச்சி’ எனும் பாகம் அமைந்துள்ள வாத்தியம்
(1) நாதஸ்வரம் (2) வயலின் (3) வீணை (4) தம்புரா (5) கோட்டுவாத்தியம்

**6.** தான்சேன் வாசித்து தேர்ச்சிப் பெற்ற வாத்தியம்
(1) ரபான் (2) ஸிதார் (3) தபேலா (4) ரபாப் (5) ஸரோட்

**7.** கனபஞ்சக இராகங்களுள் தீரசங்கராபரணத்தின் ஜன்யமான இராகம்
(1) நாட்டை (2) கௌளை (3) ஆரபி (4) வராளி (5) ஸ்ரீ

**8.** தவில் வாத்தியத்தில் பயன்படுத்தப்படும் குச்சியின் (கழி) நீளம்
(1) 20.5 cm (2) 21.5 cm (3) 22 cm (4) 22.5 cm (5) 23.5 cm

**9.** கைசிகி நிஷாதத்தை அன்னியஸ்வரமாகக் கொண்ட இராகம்
(1) பிலஹரி (2) காம்போதி (3) சாரங்கா
(4) கமாஸ் (5) பைரவி

**10.** ஒரு செக்கனில் ஏற்படும் அதிர்வுகளின் எண்ணிக்கையைக் குறிக்கும் பெயர்
(1) நெட்டாங்கு அலை (2) குறுக்கு அலை (3) உரப்பு
(4) முடி (5) மீடிறன்

[பக். 2 ஐப் பார்க்க

11. வசந்தா இராகத்தைப் போன்று 17 ஆவது மேளத்தின் மற்றுமொரு ஜன்னிய இராகம்
(1) கமாஸ் (2) லலிதா (3) பிலஹரி
(4) சிந்துபைரவி (5) ஆனந்தபைரவி

12. 'ஸங்கரி ஸங்குரு' என்ற திவிதாளக் கிருதியை இயற்றியவர்
(1) தியாகராஜ சுவாமிகள் ஆவார். (2) பைடால குருமூர்த்தி சாஸ்திரிகள் ஆவார்.
(3) சியாமா சாஸ்திரிகள் ஆவார். (4) முத்துஸ்வாமி தீட்சிதர் ஆவார்.
(5) ஸுப்பராய சாஸ்திரிகள் ஆவார்.

13. ஹிந்துஸ்தானி இசையில் வழங்கப்படும் கரானாக்கள் எனப்படுவது
(1) குருகுல முறையாகும். (2) கச்சேரி முறையாகும்.
(3) ஆலாபனை முறையாகும். (4) பஜனை முறையாகும்.
(5) கானகால முறையாகும்.

14. புன்னாகவராளி இராகம் ஒரு
(1) பஞ்சமாந்திய இராகமாகும். (2) தைவதாந்திய இராகமாகும்.
(3) மேளகர்த்தா இராகமாகும். (4) நிஷாதாந்திய இராகமாகும்.
(5) திவி அன்னியஸ்வர பாஷாங்கராகமாகும்.

15. ஒரு இராகத்தைப் பல பாகங்களாகப் பிரித்து ஆலாபனை செய்யும்போது அந்தப் பகுதிகளில் முடிக்கப்படும் ஸ்வரம்
(1) சன்னியாசம் (2) நியாசம் (3) அபன்னியாசம்
(4) பகுத்துவம் (5) அல்பத்துவம்

16. மைசூர் வாசுதேவாச்சாரியாரால் இயற்றப்பட்ட பிரபல்யமான கிருதி
(1) நகுமோமு (ஆபேரி) (2) பரமாத்முடு (வாகதீஸ்வரி)
(3) ராமாபிராமா (மத்யமாவதி) (4) ப்ரோவம்ம (மாஞ்சி)
(5) ஸந்ததம் பாஹிமாம் (சங்கராபரணம்)

17. காம்̇கரிஸ - கம்̇கம்̇ரீ எனும் ஸ்வரப் பிரயோகங்கள் இடம்பெறும் இராகம்
(1) பைரவி (2) ஹமீர் கல்யாணி (3) பிலஹரி
(4) காம்போதி (5) கல்யாணி

18. பின்வருவனவற்றைக் கருதுக.
A - மேடை அலங்காரம்
B - வாசித்த உருப்படியின் சிறப்பம்சங்கள்
C - வாசிக்கும் லாவகம்
D - பக்கவாத்தியங்களின் அணிசேர் தன்மை
E - நிகழ்ச்சித் தொகுப்பாளர்களின் கருத்துக்கள்

மேற்குறிப்பிட்டவற்றுள் ஒரு வீணை நிகழ்ச்சியை இரசித்த விடயங்களுக்கு **பொருந்தாதவற்றைக்** கொண்ட விடையினைத் தெரிவுசெய்க.
(1) A, C (2) A, E (3) B, D (4) C, D (5) C, E

19. ஹிந்துஸ்தானி இசையில் உள்ள தாட்களின் எண்ணிக்கை
(1) 7 (2) 8 (3) 9 (4) 10 (5) 11

20. 19 ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட, கன்னட மொழிப் பதத்திலிருந்து வந்த உருப்படி வகை
(1) பதம் (2) வர்ணம் (3) தரு (4) அஷ்டபதி (5) ஜாவளி

21. ஹிந்துஸ்தானி இசையில் காணப்படும் பாகேஸ்ரீ இராகத்திற்கு ஒப்பான கர்நாடக இராகம்
(1) நாட (2) சக்ரவாகம் (3) ஸ்ரீரஞ்சனி (4) ஸாவேரி (5) ஹிந்தோளம்

22. திருத்தெள்ளேணம் பாடப்படும் மெட்டு
(1) தெம்மாங்கு (2) கும்மி (3) தாலாட்டு (4) அம்மானை (5) ஊஞ்சல்

23. திருப்பதி அன்னமாச்சாரியார் தெலுங்கு மொழியில் இராகதாளமாலிகையாக இயற்றிய உருப்படி யாது?
(1) வர்ணம் (2) சூளாதி (3) அஷ்டபதி (4) தில்லானா (5) துருபத்

[பக். 3 ஐப் பார்க்க

**24.** பின்வருவனவற்றுள் திருஞானசம்பந்தரால் குறிஞ்சிப் பண்ணில் பாடப்பெற்ற தேவாரம்
(1) "என்ன புண்ணியம்...." (2) "மடையில் வாளை...."
(3) "கல்லூர்ப் பெருமணம்...." (4) "நன்றுடையானை...."
(5) "நீறுசேர்வதோர்...."

**25.** ஆபோகியின் மத்யம மூர்ச்சனையினால் தோன்றும் இராகம்
(1) ஸ்ரீரஞ்சனி (2) சுத்த ஸாவேரி (3) பிலஹரி
(4) மலயமாருதம் (5) வலஜி

**26.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.
- தந்தை துருக்கி நாட்டைச் சேர்ந்தவர்.
- சிறுவயதிலே உருது, பாரசீக மொழிகளில் பாடல் இயற்றியவர்.
- இந்திய, அரேபிய, பாரசீக இசை வகைகளை ஒப்பு நோக்கியவர்.
- ஸிதார், தபேலா போன்ற வாத்தியங்களை உருவாக்கியவர்.

மேலுள்ள கூற்றுகளோடு தொடர்புபட்ட இசைக்கலைஞர்
(1) தான்சேன் (2) மொஸாட் (3) அமிர்குஸ்ரு (4) பீதோவன் (5) பாக்கண்டே

**27.** புல்லாங்குழலின் மூடிய பகுதிக்கு வழங்கப்படும் பெயர்
(1) ஸ்வரத்துவாரம் (2) முகரந்திரம் (3) தூம்பமுகம் (4) மூடுமுகம் (5) தாரரந்திரம்

**28.** 'ஸரஸூட' எனும் ஸாவேரி இராக வர்ணத்தில் வரும் முத்திரை
(1) குருகுஹ (2) பங்கஜநாப (3) தியாகராஜ (4) ராமதாஸ (5) வெங்கடேச

**29.** பின்வருவனவற்றுள் பழனி கிருஷ்ணய்யர் எவ்வாத்தியத்தை வாசித்துப் பிரபல்யம் பெற்றார்?
(1) வீணை (2) மிருதங்கம் (3) கோட்டுவாத்தியம் (4) கடம் (5) நாதஸ்வரம்

**30.** பாக் இயற்றிய பிரபல்யமான ஆக்கங்களில் ஒன்று
(1) To the memory of a great man (2) A comparative study of music
(3) Heligen stadt Testament (4) St.Mathew Passion
(5) La finta giardini era

**31.** கோட்டுவாத்தியத்தின் சுரத்தந்திகள் சுருதி கூட்டப்பட்டிருக்கும் இராகம்
(1) தீரசங்கராபரணம் (2) ஹரிகாம்போஜி (3) கீரவாணி
(4) ஹனுமதோடி (5) மாயாமாளவகௌளை

**32.** கானடா இராகத்தில் அமைந்த 'நெரநம்மி' எனும் அடதாள வர்ணத்தினை இயற்றியவர்
(1) சுவாதித் திருநாள் (2) பட்டாபிராமய்யர்
(3) இராமநாதபுரம் ஸ்ரீனிவாஸய்யங்கார் (4) பச்சிமிரியம் ஆதியப்பய்யர்
(5) கொத்தவாசல் வெங்கடசுப்பைய்யர்

**33.** இராகத்தின் பத்து இலட்சணங்களுள் தற்கால வழக்கிலுள்ளவை
(1) அல்பத்துவம், கிரகம், பகுத்துவம் (2) அல்பத்துவம், வின்னியாசம், பகுத்துவம்
(3) பகுத்துவம், நியாசம், வின்னியாசம் (4) கிரகம், அம்சம், நியாசம்
(5) வின்னியாசம், அல்பத்துவம், நியாசம்

**34.** பத்தொன்பதாவது அஷ்டபதி 'சஞ்சீவினி அஷ்டபதி' எனப் பெயர் பெறக் காரணம்
(1) ஸ்ரீ கிருஷ்ணர் தன்னிடம் கோபம் கொண்டிருந்த ராதையிடம் சமாதானம் செய்ய முயன்றமையினாலாகும்.
(2) ஜெயதேவருக்கு ஸ்ரீ கிருஷ்ணரின் தரிசனம் கிடைத்தமையினாலாகும்.
(3) ஜெயதேவர் பத்மாவதியை மணம் முடித்தமையினாலாகும்.
(4) எட்டு கண்டிகைகளைக் கொண்டிருக்கின்றமையினாலாகும்.
(5) ஜெயதேவர் ஸ்ரீ கிருஷ்ணரின் அனுக்கிரகத்தோடு பத்மாவதியை உயிர்பெற்றெழச் செய்தமையினாலாகும்.

**35.** பூர்வி இராகத்திலும், விலோமசாபு தாளத்திலும் அமைந்த ஜாவளி
(1) சமயமிதே (2) நீ மாடலே மாயன்னுரா (3) வகலாடி
(4) வேகநீவு (5) சகிப்பிராண

[பக். 4 ஐப் பார்க்க

**36.** 1910 ஆம் ஆண்டு ஹிந்துஸ்தானி இராகங்களைப் பற்றி விளக்கிக் கூறும் நூலை வெளியிட்ட கர்நாடக இசைபற்றிக் கற்றறிந்த ஹிந்துஸ்தானி வாக்கேயகாரர்
(1) அமிர்குஸ்ரு ஆவார். (2) தான்சேன் ஆவார். (3) அக்பர் ஆவார்.
(4) நாராயணராவ் ஆவார். (5) பாத்கண்டே ஆவார்.

**37.** பாடசாலை மாணவர்கள் கூட்டு நிகழ்ச்சிகளைத் தயாரிப்பதன் மூலம் அவர்களிடத்தில் விருத்தியடையும் நற்பண்புகள் யாவை?
(1) கூட்டுறவு, போட்டி மனப்பாங்கு, உதவிசெய்தல்
(2) கூட்டுறவு, நன்மனப்பாங்கு, சுயநலம்
(3) கூட்டுறவு, நன்மனப்பாங்கு, விட்டுக்கொடுத்தல்
(4) நன்மனப்பாங்கு, சுயஆக்கம், தன்னம்பிக்கை
(5) கூட்டுறவு, சுயசெயற்பாடு, பொதுநலம்

**38.** பின்வருவனவற்றைக் கருதுக.
A - தாளத்தையொட்டிக் கற்பனாஸ்வரத்தைப் பாடுதல்
B - சாகியத்தின் எடுப்பு ஸ்வரத்தை அறிந்து பாடுதல்
C - கற்பனாஸ்வரத்தின் முடிவுஸ்வரம் நெடில் ஸ்வரமாக அமைதல்
D - கற்பனாஸ்வரம் பாடும்போது 1ஆம் 2ஆம் காலங்களில் பாடுதல்
E - கற்பனாஸ்வரத்தை மனனம் செய்து பாடுதல்
மேற்குறித்தவற்றுள் கற்பனாஸ்வரம் பாடும்போது கடைப்பிடிக்கவேண்டிய அம்சங்களுள் **பொருந்தாத** அம்சங்களைக் கொண்ட விடையினைத் தெரிவு செய்க.
(1) A, C (2) A, E (3) B, D (4) B, E (5) C, E

**39.** தனது கச்சேரியில் பல்லவி பாடுதலை பிரதானமாகக் கடைப்பிடித்துவந்த பிரபல இந்திய இசைக்கலைஞர்
(1) எம்.எஸ்.சுப்புலக்சுமி (2) பாலமுரளி கிருஷ்ணா
(3) எம்.எல்.வசந்தகுமாரி (4) டி.ஆர்.மகாலிங்கம்
(5) டி.கே.பட்டம்மாள்

**40.** மிருதங்கத்தில் ஆண், பெண் சுருதிகளுக்குரிய அளவுகள் முறையே
(1) தக்கு ஸ்ருதி 1 - 1½ கட்டை, ஹெச்சு ஸ்ருதி 3 - 5½ கட்டை
(2) தக்கு ஸ்ருதி 1 - 4 கட்டை, ஹெச்சு ஸ்ருதி 3 - 5 கட்டை
(3) தக்கு ஸ்ருதி 1 - 2½ கட்டை, ஹெச்சு ஸ்ருதி 4½ - 5 கட்டை
(4) தக்கு ஸ்ருதி 1 - 2½ கட்டை, ஹெச்சு ஸ்ருதி 4 - 5½ கட்டை
(5) தக்கு ஸ்ருதி 1½ - 2½ கட்டை, ஹெச்சு ஸ்ருதி 4 - 5 கட்டை

**41.** 35 சூளாதி தாளங்களும் 175 தாளங்களாவதற்குக் காரணமான அம்சம்
(1) கிரகபேதம் (2) சூளாதி பேதம்
(3) இராக பேதம் (4) ஜாதி பேதம்
(5) கதி பேதம்

**42.** பின்வருவனவற்றுள் அந்தர காந்தாரத்தின் சம்வாதி ஸ்வரம்
(1) காகலி நிஷாதம் (2) சாதாரண காந்தாரம்
(3) சுத்த ரிஷபம் (4) சதுஸ்ருதி ரிஷபம்
(5) கைசிகி நிஷாதம்

**43.** தம்புரா வாத்தியத்தில் மூன்றாம், நான்காம் தந்திகளுக்குச் சுருதி சேர்க்கப்படும் சுரங்கள்
(1) மத்தியஸ்தாயி ஸட்ஜம், மந்திரஸ்தாயி ஸட்ஜம்
(2) மந்திரஸ்தாயி ஸட்ஜம், மந்திரஸ்தாயி மத்யமம்
(3) மத்தியஸ்தாயி ஸட்ஜம், பஞ்சமம்
(4) மத்தியஸ்தாயி ஸட்ஜம், தாரஸ்தாயி ஸட்ஜம்
(5) தாரஸ்தாயி ஸட்ஜம், மந்திரஸ்தாயி ஸட்ஜம்

**44.** காதின் தொழிற்பாடுகளுள் நாம் கேட்கும் சப்தத்திற்குக் காரணமான பகுதி
(1) குரல்வளை (2) சிறுநரம்புகள்
(3) செவிச்சோணை (4) குருத்தெலும்பு
(5) ஏந்தியுரு

[பக். 5 ஐப் பார்க்க

**45.** 72 மேளகர்த்தா அமைப்பில் ர, கு சங்கேதங்கள் குறிப்பிடும் சக்கரங்கள்
(1) 2 ஆவதும் 8 ஆவதுமாகும்.
(2) 4 ஆவதும் 10 ஆவதுமாகும்.
(3) 3 ஆவதும் 9 ஆவதுமாகும்.
(4) 6 ஆவதும் 11 ஆவதுமாகும்.
(5) 6 ஆவதும் 12 ஆவதுமாகும்.

**46.** "மாதர் மடப்பிடியும் ... " எனும் தேவாரத்தில் நடைபேதத்துடன் பாடப்படும் வரி
(1) பத்துத்தலை தத்தக் கணைதொடு ..........
(2) செவிடு குருடு வடிவு குறைவு ........
(3) சகல செல்வ யோக மிக்க ...........
(4) கண்க ளிரண்டும் அவன் கழல் ......
(5) எழில் பொழில் குயில் பயில் .......

**47.** சதுர்த்தண்டிப் பிரகாசிகையில் இடம்பெறும் தண்டிகளாவன
(1) கீதம், வர்ணம், பிரபந்தம், பதம் என்பனவாகும்.
(2) கீதம், வர்ணம், டாயம், பிரபந்தம் என்பனவாகும்.
(3) கீர்த்தனை, டாயம், பிரபந்தம், ஆலாபம் என்பனவாகும்.
(4) கீதம், ஆலாபம், டாயம், பிரபந்தம் என்பனவாகும்.
(5) கீதம், கீர்த்தனை, வர்ணம், பிரபந்தம் என்பனவாகும்.

● பின்வரும் அட்டவணையினை அவதானித்து **48** தொடக்கம் **50** வரையான வினாக்களுக்கு விடை தருக.

| | ரி | க | த | நி |
|---|---|---|---|---|
| **காந்தாமணி** | **சதுஸ்ருதி** | **அந்தர** | **சுத்த** | **சுத்த** |
| A | சதுஸ்ருதி | அந்தர | சுத்த | கைசிகி |
| லதாங்கி | சதுஸ்ருதி | அந்தர | சுத்த | D |
| வாசஸ்பதி | சதுஸ்ருதி | அந்தர | B | கைசிகி |
| மேசகல்யாணி | சதுஸ்ருதி | அந்தர | சதுஸ்ருதி | காகலி |
| சித்ராம்பரி | சதுஸ்ருதி | அந்தர | C | காகலி |

**48.** A குறிப்பிடப்பட்டுள்ள இடத்தில் வரவேண்டிய இராகத்தின் பெயர் யாது?
(1) சாருகேசி
(2) ரிஷபப்ரியா
(3) சியாமளாங்கி
(4) திவ்யமணி
(5) ராகவர்த்தனி

**49.** இவ் மேளகர்த்தா அட்டவணை அமைந்துள்ள சக்கரத்தின் பெயர் யாது?
(1) ஆதித்ய (2) திசி (3) பாண (4) ருத்ர (5) வஸு

**50.** B, C, D என்பவை குறிப்பிடப்பட்டுள்ள இடங்களில் வரவேண்டிய ஸ்வரஸ்தானங்கள் முறையே
(1) சதுஸ்ருதி, ஷட்சுருதி, காகலி என்பனவாகும்.
(2) சுத்த, சதுஸ்ருதி, கைசிகி என்பனவாகும்.
(3) சதுஸ்ருதி, சதுஸ்ருதி, கைசிகி என்பனவாகும்.
(4) சுத்த, ஷட்சுருதி, சுத்த என்பனவாகும்.
(5) சதுஸ்ருதி, ஷட்சுருதி, கைசிகி என்பனவாகும்.

* * *

AL/2019/55/T-II/(OLD)



පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD



අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

කර්ණාටක සංගීතය II
கர்நாடக சங்கீதம் II
Carnatic Music II

55 T II

08.08.2019 / 0830 – 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

**அறிவுறுத்தல்கள்:**

* பகுதி I இல் எவையேனும் **இரண்டு** வினாக்களையும், பகுதி II இல் எவையேனும் **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

## பகுதி I

**1.** (i) வாத்திய த்ரயத்துள் முதலாவதாக இடம்பெறும் வாத்தியம் யாது?

(ii) மேலே (i) இல் குறிப்பிட்ட வாத்தியத்தை வாசிப்பதில் பிரபல்யம் பெற்ற வித்துவான்கள் **இருவரின்** பெயரைக் குறிப்பிடுக.

(iii) இவ்வாத்தியத்தின் படத்தினை வரைந்து அதன் பாகங்களைக் குறித்துப் பெயரிடுக.

(iv) இவ்வாத்தியத்தின் அமைப்பை விளக்குக.

(v) இவ்வாத்தியத்தினை சுருதி சேர்க்கும் முறையை விளக்குக.

**2.** பின்வரும் இராகங்களில் **இரண்டினைத்** தெரிவுசெய்து, அவற்றின் இலட்சணங்களை விரிவாகத் தருக. (உருப்படிகள், சஞ்சாரங்கள் எழுதப்படல் வேண்டும்.)

(i) ஸ்ரீ ரஞ்சனி

(ii) ஷண்முகப்ரியா

(iii) கமாஸ்

(iv) 22 ஆவது மேளகர்த்தாவின் ஜன்யமான ஔடவ வக்ர சம்பூர்ண இராகம்

**3.** நவராகமாலிகா வர்ணத்தினை முழுமையாக ஸ்வரஸாகித்திய தாள அங்க அடையாளங்களுடன் எழுதுக. (இராகம், தாளம், ஆரோஹணம், அவரோஹணம், இயற்றியவர் பெயர் ஆகியன குறிப்பிடப்படல் வேண்டும்.)

## பகுதி II

**4.** (i) 'கனம்' என்ற முறையில் பாடுவதற்குத் தேர்ச்சிபெற்ற வாக்கேயகாரரைப் பெயரிடுக.

(ii) மேலே (i) இல் குறிப்பிட்ட வாக்கேயகாரரின் சிஷ்யர்களில் **இருவரின்** பெயரைக் குறிப்பிடுக.

(iii) இவ்வாக்கேயகாரரின் வாழ்க்கை வரலாற்றை விரிவாக எழுதுக.

(iv) இவ்வாக்கேயகாரர் தமிழிசைக்கு ஆற்றிய தொண்டினை விவரிக்குக.

[பக். 2 ஐப் பார்க்க

**5.** கீழே தரப்பட்டுள்ள இசை உருப்படிகளில் **இரண்டினைத்** தெரிவுசெய்து அவற்றின் இலட்சணங்களை விரிவாகத் தருக.

(i) சிவபுராணத்தை உள்ளடக்கிய திருமுறைப் பாடல்

(ii) பதம்

(iii) இலட்சணகீதம்

**6.** பின்வரும் விடயங்கள் ஒவ்வொன்றையும் பற்றிச் சிறுகுறிப்பு எழுதுக.

(i) சோடசாங்கம்

(ii) திரிதால்

(iii) பிரஸ்தாரம்

(iv) தாளம்

(v) யமகம்

**7.** கர்நாடக இசைக்கும் மேலைத்தேய இசைக்கும் இடையிலான ஒற்றுமை, வேற்றுமைகளை ஆராய்க.

**8.** 20 ஆம் நூற்றாண்டில் இந்தியாவில் வாழ்ந்த,

(i) பிரபல்யமான வாத்திய இசைக் கலைஞர்கள் (பாடத்திட்டத்தில் உள்ளவர்கள்) **ஐவரைக்** குறிப்பிடுக.

(ii) மேலே (i) இல் குறிப்பிட்டவர்களுள் ஒருவரைத் தெரிவுசெய்து அவரது இசைச் சிறப்பினையும் அவர் கர்நாடக இசைக்கு ஆற்றிய பணியினையும் விவரிக்குக.

**அல்லது**

குரல்வளையின் அமைப்பு, தொழிற்பாடுகள் பற்றி விளக்கி, ஒரு பாடகருக்கு குரலிசையின் அவசியம் பற்றி விவரிக்குக.

* * *